Regd No TN/MS C 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT-PRE PAYMENT LICENCE NO G6 TN MS(C)P.P 55



**குரோதம்**

குரோதம் எனும் குதிரை பூட்டி வெற்றி ரதத்தை செலுத்தவே முடியாது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**குறள்**

அறிவு பெற்றவன், அறிவையே முதன்மையாகக் கொண்டவன், ஆராய்ச்சித் தன்மை கொண்டவன் எவனும் குறளை மதித்தே தீருவான்.

தந்தை பெரியார்



மலர்: 8 சென்னை 14 - 12 - 1983 புதன் வெளியூர் 15 - 12 1983 வியாழன் இதழ் 59

★ கழகம் ஆட்சிக்கு வந்தபிறகு 31 லட்சம் பேருக்கு புதிதாக வேலைவாய்ப்பு

★ மக்களை முட்டாளாக்கும் தி. மு. க. விலைவாசி பட்டியல்

★ வன்முறை - உயிர்சேதம் விளைவித்தால் சட்டப்படி நடவடிக்கை

## மறியல் போராட்டம் என்ற பெயரில் தமிழ்நாட்டில்

# குழப்பம் ஏற்படுத்த கருணாநிதி திட்டம்

## முதல்வர் புரட்சித்தலைவர் எச்சரிக்கை

### வேடிக்கை பார்க்கக்கூட செல்லாதீர் என மக்களுக்கு வேண்டுகோள்

**திருப்பூர், டிச. 14. தி மு க தலைவர் கருணாநிதியின் நோக்கம் விலைவாசி குறையவேண்டும் என்பதல்ல, நாட்டில் குழப்பத்தை ஏற்படுத்துவது தான் அவரது நோக்கம் என்று முதல்வர் புரட்சித்தலைவர் எச்சரித்தார்.**

போராட்டத்தி போதுவன்முறை-உயிர்சேதம் விளைவித்தால் சட்டப்படி நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் முதல்வர் அறிவித்தார்.

வேடிக்கை பார்க்கக் கூட மறியல இடத்திற்குச் செலலாதீர் என பொது மக்களுக்கு புரட்சித்தலைவர் வேண்டுகோள் விடுத்துள்ளார்

திருப்பூர் நகரத்துக்கு 2 வது குடிநீர் திட்டத்துக்கான அடிக்கல் நாட்டும் விழா நேற்று நடந்தது. முதல்வர் புரட்சித் தலைவர் அடிக்கல் நாட்டினார். பென்னி ஆலைத் திடலில் இந்தவிழா நடந்தது

ரூ. 11 கோடி செலவில் இந்த திட்டம் நிறைவேற்றப்பட உள்ளது.

இந்த விழாவுக்கு அமைச்சர் ராகவானந்தம் தலைமை வகித்தார். அமைச்சர்குழந்தைவேலு, அரசுக் கொறடா திருப்பூர் மணிமாறன் ஆகியோர் பேசினர்.

விழாவில் அமைச்சர்கள் அரங்கநாயகம், முத்துசாமி, திருச்சி சவுந்தரராசன், குடிநீர் வடிகால் வாரிய தலைவர் ஏ. எம். ரகுநாதன், மாவட்ட கலெக்டர் பாஸ்கரதாஸ் எம். எல். ஏக்கள் கோவைத்தம்பி, சின்னராசு, பி. என். பரமசிவம், நெகமம் கந்தசாமி, எஸ். பழனிச்சாமி, பொள்ளாச்சி ரத்தினம், பி. கந்தசாமி ஆகியோர் கலந்து கொண்டனர். மற்றும் நாடாளுமன்ற உறுப்பினர்கள் சின்னசாமி, ஜி. வரதராஜ் ஆகியோரும் கலந்து கொண்டார்கள்.

2-வது குடிநீர் திட்டத்துக்கு அடிக்கல் நாட்டி வைத்துப் பேசுகையில் முதல்வர் புரட்சித் தலைவர் கூறியதாவது:-

நான் நாளை சென்னையில் சில நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ள வேண்டியதுள்ளது. எனவே இப்போது கூட்டம் முடிந்ததும் சென்னை புறப்படுகிறேன்.

### மக்களுக்கு பாதுகாப்பு

திருப்பூர் நகருக்கு குடிநீர் கிடைக்கச் செய்யும் இரண்டாவது கட்ட திட்டத்துக்கு ரூ. 11 கோடி செலவு செய்ய இருக்கிறோம். இப்படிப்பட்ட நல்ல திட்டங்களை செயல்படுத்த நாட்டில் அமைதி நிலவவேண்டும். போலீஸ் துறையினரானாலும், அமைச்சர்கள் ஆனாலும் அதிகாரிகள் ஆனாலும் அமைதியான சூழ்நிலை இருந்தால்தான் மக்களுக்காக நல்ல பல காரியங்களைச் செய்ய முடியும்.

வருகிற 15-ந் தேதி அன்று கருணாநிதியும் நான் மதிக்கும் அண்ணன் கல்யாணசுந்தரமும் மற்றும் சிலரும் சேர்ந்து மறியல்போராட்டம் நடத்தப்போவதாக அறிவித்துள்ளார்கள். நாங்கள் 1977ல் ஆட்சிக்கு வந்தபோது சத்துணவு திட்டம், ஊரக வளர்ச்சித் திட்டம், தன்னிறைவுத் திட்டம் போன்ற பலதிட்டங்களை கொண்டு வர இருந்தோம். ஆனால்அப்போதுகருணாநிதி பல போராட்டங்களை நடத்தி, தொடர்ந்து எங்களுக்குதொல்லைகளை கொடுத்துக் கொண்டே இருந்தார். இந்தப் போராட்டங்களிலிருந்து மக்களுக்கு பாதுகாப்பு அளிக்கவே எங்களுக்கு நேரம் சரியாக இருந்தது.

நான் முன்பு சொன்ன திட்டங்களைப் பற்றி எண்ணுவதற்குக்கூட அவர்கள் இடம்கொடுக்காமல், போராட்டத்தை நடத்திக் கொண்டு இருந்தார்கள். பிறகு ஆட்சி டிஸ்மிஸ் செய்யப்பட்டது.

பின்னர் நாங்கள் உங்களிடம் வந்தோம். எங்களிடம் ஆட்சிப் பொறுப்பைஒப்படைத்தீர்கள். அப்போது, எழுந்த பிரச்னை ஆட்சிப் பொறுப்பை கருணாநிதியிடம் கொடுப்பதா? அல்லது எங்களிடம் கொடுப்பதா என்பதாகும். நாங்கள் தான் வேண்டும் என்று கூறி அனைத்திந்திய அண்ணா தி மு கழகத்தை ஆட்சியில் அமர்த்தினீர்கள்.

### மக்கள்நலத் திட்டங்கள்

நாங்கள் பல்வேறு மக்கள் நலத் திட்டங்களை நிறைவேற்றி வருகிறோம். குடிநீர்ப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு முக்கியத்துவம் கொடுக்கிறோம்

கருணாநிதி சென்னையில் பேட்டி கொடுத்திருக்கிறார்.

"இப்போராட்டம் நடத்த வேண்டாம் என்று எங்களை வானொலி, டி. வி. மூலமாக எம். ஜி. ஆர். கேட்டுக்கொண்டுள்ளார். ஆனால் அவர் எங்கள் ஆட்களை கைது செய்கிறார்" என்று அந்த பேட்டியில் கருணாநிதி சொல்லியிருக்கிறார்.

ஒரு நோய் பற்றி மருத்துவர் பல்வேறு வகையில் சிந்திக்க வேண்டியுள்ளது. நோய்பரவுவதிலிருந்து மக்களைக் காப்பாற்ற மருத்துவர் தடுப்பு நடவடிக்கை எடுக்க வேண்டாமா? அதே போல் தான் அரசியலில் எழுகிற பிரச்னைகளும் ஆகும்.

"போராட்டம் நடந்தே தீரும், 1 லட்சம் பேர் சிறைக்குப் போவோம்" என்கிறார் கருணாநிதி.

### கருணாநிதி போட்ட பொய்வழக்கு

இப்படிஅவர்சொல்லும் போது, அரசு, முன் நடவடிக்கைகளை செய்ய வேண்டாமா? இப்போது கருணாநிதிநல்லவர்போல் பேசுகிறார். ஒரு தவறும் செய்யாத-ஒரு பாவமும் செய்யாத என் மீது கருணாநிதி வழக்குப் போட்டார். இங்குள்ள மாஜிஸ்திரேட்கோர்ட்டில் எத்தனை முறை நான் நிறுத்தப்பட்டேன்! என் மீது வீண்பழி சுமத்தி, அவர்களது கட்சி எம். எல். ஏ. வைப் பற்றி அவதூறுசெய்துவிட்டதாக வழக்குப் போட்டார்கள். அது உண்மையான வழக்காம். ஆனால் கொலை செய்தாலும் திருடினாலும், கற்பழித்தாலும், சூறையாடினாலும் நாங்கள் வழக்குப்போடக் கூடாதாம். அது பொய் வழக்கு என்று சொல்லி விடுவார்கள்.

கருணாநிதி ஆட்சியில் இருந்தபோது என்மீது 9 வழக்குகள் போட்டார் கருணாநிதி.

கப்பல் பேரம் நடத்தி, லஞ்சம்வாங்கி விட்டதாக கருணாநிதி பேசினார். உடனே அதை எதிர்த்து வழக்கு போட்டோம். அந்த குற்றச்சாட்டை நிரூபித்தால் நான் தமிழகத்தை விட்டே போய் விடுகிறேன் என்று சொன்னேன்.

குற்றச்சாட்டுக்கு ஆதாரம் இருக்கிறது என்று கூறியவர் என்ன சொன்னார்?

"ஐயோவழக்கு போடுகிறார்களே" என்று சொன்னார். அவர் ஆட்சியில் இருந்த போது என்னென்ன நடந்தது! பத்திரிகை ஆபீசுக்குள் நுழைந்து அடிக்கவில்லையா? குமுதம், ஆனந்தவிகடன், அலை ஓசை ஆகிய பத்திரிகை அலுவலகங்களுக்கு சென்றுதாக்கவில்லையா?

பத்திரிகை ஆசிரியர்கள் எல்லாம் தாக்கப்பட்டார்களே, கருணாநிதி ஆட்சியிலிருந்தபோது எவ்வளவு கொடுமைகள் நடந்தன.

கருணாநிதியைப் பொறுத்தவரை அவருக்கு அநியாயம் சொந்தம். எங்களுக்கு நியாயம்தான் சொந்தம். போராட்டம் மறியல் என்கிறார்கள். மக்களின் அன்றாட வாழ்வுக்கு இடையூறு செய்ய முயற்சிக்கிறார்கள். அப்படி மறியல் செய்பவர்களை கைது செய்து 2, 3 நாட்கள் கழித்துவிட்டு விடலாம். என்று இருக்கிறோம். ஆனால் உயிர்ச்சேதத்தை அவர்கள் உண்டாக்கினால் யார் யார் அதற்குக் காரணமோ - அவர்களின் மீது சட்டப்படி நடவடிக்கை எடுக்கப்படும்.

ஒரு லட்சம் பேர் சிறைக்குச் செல்வோம் என்கிறார் கருணாநிதி. போராட்டம் என்பது சிறைக்குப் போவதற்குத் தான் நடத்துகிறார்கள். விலைவாசியை குறைக்க அவர்கள் போராட்டம் நடத்தவில்லை

### கருணாநிதியின் நோக்கம்

மகாத்மா காந்தியடிகள் போராட்டம் நடத்தி

(2-ம் பக்கம் பார்க்க)

## ப.உ.ச. கடிதம்

### வாழிபல்லாண்டுவாழி!

பேரன்புடையீர்!

தமிழக சட்டப்பேரவைத் தலைவர் மாண்புமிகு இராசாராம் அவர்கள் தொட்டது துலங்கும்! கை பட்டது விளங்கும்!

எளிதில் எதையும் பொறுப்பேற்று செய்ய மாட்டார்! பொறுப்பேற்று விட்டால் காண்போர் வியக்கத்தக்க அளவிற்கு சிறப்பாகச் செய்து காட்டுவார்! அதுவும் அவருடைய ஆற்றலை எவரேனும் கேள்விக்குறியாக்கிவிட்டால் விஸ்வரூபம் எடுத்திடுவார்... அவ்வளவுதான் கடுகு மலையாகும்! குளம் கடலாகும்!

புரட்சித்தலைவர் அவர்களுக்கு, அவரைக் கேட்காமலேயே, பாராட்டு விழா ஏற்பாடு செய்தார்! தனக்கிருக்கும் சொல்வாக்கும், செல்வாக்கும் எத்தகையது என்று காட்டிட விஸ்வரூபம் எடுத்தார்! புதிய வரலாற்றையே உருவாக்கிக் காட்டிவிட்டார்!

சேலம் நகரமே மக்கள் வெள்ளத்தில் மூழ்கித் திணறியது! எந்தப் பக்கம் பார்த்தாலும் மக்கள் கூட்டம்...... எல்லோருடைய பேச்சும் விழாவின் சிறப்புப் பற்றியதே!

தன்னைப் பாராட்ட செய்யப்பட்ட ஏற்பாட்டின் அளவும், தன்மையும் கேள்விப்பட்ட மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களே, நண்பர் இராசாராம் அவர்களின் அழைப்பை மறுக்கவோ வெறுக்கவோ முடியாத இக்கட்டான சூழ்நிலையை உருவாக்கியது! பேரவைத் தலைவர் தன் முழு திறமையையும் இந்த விழாவில் வெளிப்படுத்தியிருந்தார்!

அரசியலில் மட்டுமின்றி கலை உலகிலும் தனக்குள்ள செல்வாக்கை மாண்புமிகு ராசாராம் அவர்கள் வெளிப்படுத்த வாய்ப்பை உருவாக்கினார்! உருவாக்கிய வாய்ப்பை [illegible]னை வரும பெருமைப்படத்தக்க விதத்தில் நடத்தியும் காட்டினார்!

தமிழக வரலாற்றின் வைரவரிகளாக மாறிவரும் தளநாயகனைப் பாராட்ட நாடாளுமன்ற அவைத் தலைவர்பலராம்ஜாக்கர், மத்திய அமைச்சர்சிவசங்கர்,

(2-ம் பக்கம் பார்க்க)

### பிப்ரவரி 3 அல்லது 4-வது வாரத்தில்

# நகர சபைத் தேர்தல்: அனைத்துக் கட்சிக் கூட்டத்தில் முடிவு

### முதல்வருடன் ஆலோசித்தபிறகு தேதி அறிவிக்கப்படும் என குழந்தைவேலு தகவல்

**சென்னை, டிச 14 பிப்ரவரி 3-வது அல்லது 4 வது வாரத்தில் தமிழ் நாட்டில் நகர சபைத் தேர்தல்களை நடத்தலாம் என அனைத்துக் கட்சிக் கூட்டத்தில் தீர்மானிக்கப் பட்டது. முதல்வர் புரட்சித்தலைவரை கலந்து ஆலோசித்த பிறகு தேர்தல் தேதி அறிவிக்கப்படும் என அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.**

சென்னை, டிச. 14— தமிழகத்தில் உள்ள 106 நகரசபைகளுக்கும் வரும் பிப்ரவரி மாதம் தேர்தல் நடத்தப்படும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் கடந்த சட்டசபைக் கூட்டத்தில் அறிவித்தது தெரிந்ததே.

இதுகுறித்து சர்வகட்சிகளின் ஆலோசனைக் கூட்டம் இன்று காலை 11 மணிக்கு சென்னை தலைமைச்செயலகப்புதுக் கட்டிடத்தில் நடைபெறது.

உள்ளாட்சித் துறை அமைச்சர் குழந்தைவேலு [illegible]ந்தக் கூட்ட[illegible]

2-ம் பக்கம் பார்க்க

சென்னை நகரில்

## தடை உத்தரவு

சென்னை, டிச. 14— சென்னையில் இன்று(14ந் தேதி)முதல் 29 ந் தேதி முடிய 15 தினங்களுக்கு ஊர்வலங்கள் மற்றும் கூட்டங்கள் ஆகியவற்றை அனுமதியின்றி நடத்தக் கூடாதுஎன நகரபோலீஸ் கமிஷனர்ஸ்ரீபால் அறிவித்துள்ளார்.

நாளை (15-ந் தேதி)

## சாராயக் கடைகளை மூட அரசு உத்தரவு

சென்னை, டிச, 14— தமிழ் நாட்டில் நாளை (15 ந் தேதி) சாராயக் கடைகளை மூட அரசு உத்தரவிட்டுள்ளது.

இன்று (14-ந் தேதி)

## வானொலி - டி.வி.யில் புரட்சித்தலைவர் உரையாற்றுகிறார்

முதல்வர் புரட்சித்தலைவர் இன்று (14-ந் தேதி) மாலை 7 மணிக்கு சென்னை வானொலியில்உரையாற்றுகிறார். இதை, தமிழகத்தில் உள்ள மற்ற எல்லா வானொலி நிலையங்களும் அஞ்சல் செய்கின்றன.

இன்று (14-ந் தேதி) மாலை 7.03 மணிக்கு சென்னை தொலைக் காட்சியில் முதல்வர் புரட்சித்தலைவர் உரையாற்றுகிறார்.

ஆவடியில்

## அமைச்சர் திருநாவுக்கரசு பேசுகிறார்

சென்னை, டிச. 14— ஆவடி பகுதி அனைத்திந்திய அண்ணா தி. மு கழகத்தின் சார்பாக மாபெரும் கழகப்பொதுக் கூட்டம் வரும் 17-ந் தேதி மாலை பக்தவச்சல புரத்தில் புலவர் சோமுசா தலைமையில் கேசவன் முன்னிலையில் நடைபெறுகிறது. இக்கூட்டத்தில் அமைச்சர் திருநாவுக்கரசு கலந்து கொண்டு சிறப்புரை யாற்றுகிறார். காஞ்சி பன்னீர்செல்வம், ஆவடி குமார், சுல்தான், மணி, மனோகரன், பாண்டுரங்கம், இமானுவேல் ராஜ், மணிகண்டன் மற்றும் பலர் பேசுகின்றனர்.

## தமிழக கடற்கரை பகுதிகளில் மேலும் மழை

சென்னை, டிச. 14— வடகிழக்கு பருவமழை தீவிரம் அடைந்திருப்பதால் தமிழக கடற்கரை பகுதிகளில் கடந்த 2 நாட்களாக சுமாரான மழை பெய்துள்ளது.

மேலும் ஒரு நாள் நாளைகாலைவரை தமிழக வடக்குக் கரையோரப் பகுதிகளில் ஆங்காங்கே சுமாரான மழைபெய்யும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது. கடந்த 2 நாட்களில் பெய்த மழை நுங்கம்பாக்கம் மற்றும் மீனம்பாக்கம் ஆகிய பகுதிகளில் 13 மில்லி மீட்டர் பெய்ததாக பதிவு செய்யப்பட்டுள்ளது நேற்றுபிற்பகல் 3-30 மணி வரையில் நுங்கம்பாக்கத்தில்மேலும் 6 மில்லிமீட்டரும் பூண்டியில் 15 மில்லிமீட்டரும், புழலில் 5 மில்லிமீட்டர் மழையும் பெய்துள்ளது.

இலங்கைக்குக் கிழக்கே வங்கக்கடலில் குறைந்த காற்றழுத்த மண்டலம் உருவாகியிருப்பதால் வடகிழக்கு பருவமழை தீவிரமடைந்துள்ளது.

# புரட்சித்தலைவர் எச்சரிக்கை...

(முதல் பக்கத் தொடர்ச்சி)

னார். அடுத்தவர்களுக்கு தொல்லை இல்லாமல், அதே சமயத்தில் தனது கருத்தை நாட்டு மக்களுக்குத் தெரியப்படுத்த அறப்போர்களை காந்தி நடத்தினார்.

விலைவாசி உயர்வு அநியாயம் என்றால் அதைக் குறைப்பதற்கு போராட்டம் நடத்த அவர்கள் விரும்பினால் என்ன செய்திருக்கவேண்டும். தனது கட்சிக்காரர்களிடம் கலந்து பேசி, இன்னின்ன இடத்தில் இன்ன நேரத்துக்கு இன்னின்னார் மறியல் செய்வார்கள் என்பதை அறிவிக்கவேண்டும்.

## மக்கள் விருப்பம்

ஆனால்கருணாநிதியின் நோக்கம் விலைவாசி குறையவேண்டும் என்பதல்ல. நாட்டில் குழப்பத்தை ஏற்படுத்த வேண்டும் என்பது தான் அவரது நோக்கம். திடீரென்று 1000 பேர் புறப்பட்டு அரசு அலுவலகத்துக்குள் நுழைந்தால் என்ன ஆகும்? அதை அதிகாரி தடுத்தால் கல் விழும். எது வந்து விழுந்து விடும் என்று எவருக்கும் தெரியாது.

நாட்டில் அமைதியான ஆட்சி நடக்க வேண்டும் என்று மக்கள் விரும்பி எங்களை இரண்டாவது முறையும் தேர்ந்தெடுத்தார்கள்.

விலைவாசிப்பட்டியலை கருணாநிதி கூறுகிறார். 1976-முதல் 83 வரை உள்ள விலைவாசியை அவர் சொல்கிறார். ஆனால் அவர் என்ன செய்ய வேண்டும்?

1976 ஜனவரி கடைசியில் அவர் பதவி இழந்தார். ஆனால் அந்த 1976 இறுதி கட்டம வரையில் குடியரசுத் தலைவர் ஆட்சி நடந்தது. ஆனால் கருணாநிதியோ, இந்த 76-ம் ஆண்டைச் சேர்த்து பட்டியல் போடுகிறார். மக்களை முட்டாள் என்று அவர் கருதுகிறார்.

1971 ல் திமுக தேர்தலில் ஜெயித்து வந்தது. 1971 முதல் 83 வரை எப்படி விலைவாசி இருந்தது என்பதை அவர் சொல்ல வேண்டாமா?

1976 முதல் 1983 வரை விலைவாசியை பாரீர் என்றுசொன்னால் என்ன அர்த்தம்?

மக்களை இப்படி ஏமாற்ற முடியாது. இப்படி பேசுகிறவரிடம் கம்யூனிஸ்ட் கட்சியினர் எப்படி போய்ச் சேர்ந்தார்கள்?

நாங்கள் தனிக்கட்சி ஆரம்பித்ததும், எங்களுக்கு முதன் முதலில் ஆதரவு தந்தது கம்யூனிஸ்ட் கட்சி. அப்போது கே டி. ராஜு ஒரு கூட்டத்தில் சொன்னார்

''எம். ஜி. ஆர் காலில் அடிபடுமேயானால் அடித்தவன் மண்டையில் அடி விழும்'' என்றார் அப்படிப் பேசிய கம்யூனிஸ்ட் கட்சியினர் இப்போது கருணாநிதியுடன் எப்படி இந்தப் போராட்டத்தில் சேருகிறார்கள்?

கம்யூனிஸ்ட் கட்சியினரிடம் ஆட்கள் உள்ளனர் ஆனால் இந்தச் செயலில் நியாயமில்லை. விலைப் பட்டியல் போடுகின்ற கருணாநிதி, 1971 முதல் 83 வரை விலைவாசி நிலவரத்தை சொல்லட்டும் பார்ப்போம். 1971-ல் ஒரு சவரன் என்ன விலை? அப்போது சுமார் ரூ 150. கருணாநிதி ஆட்சியிலிருந்து இறக்கப்பட்ட 1976 ஜனவரியில் சவரன் விலை ரூ. 410.

## தங்கத்தின் விலையை உயர்த்தியது யார்?

தங்கத்தின் விலையை உயர்த்தியதுயார்? போன தேர்தலில் கூட தாலி இருப்பது இங்கே? தங்கம் எங்கே என்று கேட்டார்? இப்போது சவரன் என்ன விலை? சுமார்1500 ரூபாய் இதற்கு யார் காரணம்?

1971-ல் ஒரு ரூபாய்க்கு அரைப்படி அரிசி கிடைத்தது என்றால் அதே அரிசி இப்போது 10 ரூபாயாக உயர்ந்தது என்றால் அரிசியின் மதிப்பு உயர்ந்ததா? பணத்தின் மதிப்பு உயர்ந்ததா? இதை ஒரு கணக்குக்குத்தான் சொல்கிறேன்.

விலைவாசி உயர்ந்தால் பணத்தின் மதிப்பு குறைகிறது.

ஒரு ரூபாயின் மதிப்பு 18 பைசா தான். என்கிறார்கள். நான் உலகம் சுற்றும் வாலிபன் படம் எடுக்க வெளிநாடு சென்ற அப்போது ஒரு டாலரின் மதிப்பு 7½ ரூபாய் ஆனால் இப்போது டாலரின் மதிப்பு 11 ரூபாய். டாலர் விலை அப்படியே இருக்கிறது ஆனால்ரூபாய் மதிப்பு குறைகிறது.

ரூபாய்நோட்டு அச்சடிக்கும்போது அந்தஅளவுக்கு தங்கம் கையிருப்பில் இருக்க வேண்டும். 1 கோடி ரூபாய் மதிப்புள்ள தங்கம் கையிருப்பில்இருக்கும் போது 10 கோடி ரூபாய்க்கு நோட்டு அச்சடித்தால் பணத்தின் மதிப்பு குறையும் தங்கத்தின் விலையும் உயரும். கடந்த 3 ஆண்டுகளாக தொடர்ந்து மழை இல்லை. நாங்கள் சத்துணவுத் திட்டம் வேலைக்கு உணவுத்திட்டம் தன்னிறைவுத் திட்டம் ஆகியவற்றைதொடர்ந்து செயல்படுத்துகிறோம். அதற்கு அரிசி கொடுக்க வேண்டியுள்ளது திட்டங்கள் செயல்பட்டு வருகின்றன.

அரிசி உற்பத்திதற்போது குறைந்துள்ளது. நாங்கள் ஆட்சிக்கு வந்த பிறகு புதிதாக 8 ஆயிரம் நியாய விலைக்கடைகள் திறந்து ஏழைகளுக்கு அத்தியாவசிய பொருட்களை வழங்கி வருகிறோம். வெளிச்சந்தையில் விலை உயராமல் இருக்க நியாய விலை கடைகள் மூலம் கிலோ அரிசி சுமார் 2 ரூபாய்க்கு விற்று வருகிறோம்.

## கருணாநிதி ஆட்சியில் நடந்ததென்ன?

ஆனால் கருணாநிதி ஆட்சியில் என்ன நடந்தது? தஞ்சையில் அரிசி உற்பத்தியாகியிருந்தது. தஞ்சையிலிருந்து அரிசி எடுத்துச் செல்ல தடை இருந்தது. திடீரென்று ஒரு நாள் அரிசியை வெளியே கொண்டு போக உத்தரவு பிறப்பித்தார்கள். தமிழகத்தின் வேறு பகுதிகளுக்கு அரிசி போகவில்லை. கேரளாவுக்கும் மற்ற இடங்களுக்கும் உடனடியாக அரிசி கடத்தப் பட்டது. ஆயிரக்கணக்கான லாரிகளில் அரிசியைக் கடத்த அனுமதித்தார்கள்

இந்தக்கொடுமைநடந்த நேரத்தில் கன்னியாகுமரி மாவட்டத்தில் படி அரிசி 10 ரூபாய் விலை சென்னையில் 7 ரூபாய்.

ஆனால் இப்போது தொடர்ந்து வறட்சி வந்திருக்கிறது. அரிசி விளைச்சல் குறைந்தது. நாங்கள் வெளி மாநிலத்தில்கிலோ 5 ரூபாய் அளவுக்கு அரிசியைவாங்கி இங்கே 2 ரூபாய் அளவுக்கு கொடுக்கிறோம்.

வெளிமாநிலத்தில் அரிசி வாங்கும் போது தவறு நடந்து விடக்கூடாதே என்பதற்காக அரசு தலைமைச் செயலாளர் தலைமையில் குழு அமைத்தோம். அரிசி உற்பத்தி நன்றாக இருந்த போது 20 கிலோ அரிசி வழங்கினோம், காவல் துறையினருக்கு பாதி விலையில்அரிசிகொடுக்கும் திட்டத்தை கொண்டு வந்தோம். மத்திய தொகுப்புக்கு அரிசி கொடுக்கமுன் வந்தோம், முதலில் 2-லட்சம் டன் அரிசி கொடுத்தோம். மேலும் அரிசி கொடுக்க முன்வந்த போது அதை வெளி நாட்டுக்கு அனுப்பும்படி மத்தியஅரசு சொன்னது. அதன் படி செய்தோம்.

சத்துணவு திட்டம் கொண்டு வருவோம் என்று தேர்தலின் போது கூறினோமா? சொல்லாமலேயே சத்துணவுத் திட்டத்தை கொண்டு வந்துள்ளோம். 65 லட்சம் குழந்தைகள் சத்துணவு சாப்பிடுகிறார்கள். ஆனால் கருணாநிதி என்ன சொல்கிறார்.?

குழந்தைகளை தட்டு ஏந்த வைக்கிறார்கள் என்கிறார்.

கருணாநிதி நிலைமை அப்படியில்லை. கோடி கோடியாக பணம் வைத்திருக்கிறார். என்கிறார்கள்.

பெற்றோருக்கு வேலை வாய்ப்பு இல்லாததால் ஏழ்மை நிலையில் உள்ள குழந்தைகள் சத்துணவு சாப்பிடுகின்றன.

கருணாநிதி தனதுஆட்சியில் தொழில் தொடங்கி வேலை வாய்ப்பை ஏற்படுத்தியிருந்தால்குழந்தைகளுக்கு சாப்பாடு போட வேண்டிய நிலைமை வந்திருக்குமா?

## பழைய நினைவுகள்

இந்தியாவிலுள்ள குழந்தைகளுக்கு ஊட்டச் சத்து இல்லாததால் ஊனமடைகின்றன என்று வெளிநாட்டு நிபுணர்கள் கூறுகிறார்கள். ஒரு தாய் சொன்னது நினைவுக்கு வருகிறது

நடக்க முடியாத நிலையில் இருந்த குழந்தை. தொடர்ந்து ஒரு ஆண்டு சத்துணவு சாப்பிட்டு நடக்க தொடங்கியது. இதைச் சொன்னால் கருணாநிதி கேலிசெய்வார். அவர் 25 ஆண்டுகளுக்கு முன் கஷ்டப்பட்டதை நினைத்துபார்க்கவேண்டும்

இப்போது அவர் கோடீஸ்வரர் ஆகிவிட்டதால் பழைய நிலைமைகளை நினைத்துப் பார்க்காமல் இருக்கிறார். நான் இளம் வயதில் உணவுக்கு கஷ்டப்பட்டதை பல இடங்களில் சொல்லி இருக்கிறேன். அந்த துயரங்களையெல்லாம் நான் மறக்கவில்லை.

சத்துணவு போடுவதால் குழந்தைகளிடையே எந்த பாகுபாடும் இல்லை. சாதி உணர்வு, பணக்காரன்- ஏழை என்ற எண்ணம் மறைந்து விடுகிறது. ''அனா'' ''ஆவன்னா'' ஏ.பி.சி.டி. மற்றும் கூட்டல், கழித்தல் கணக்குகள் ஆகியவற்றை பிஞ்சுக் குழந்தைகளுக்கு விளையாட்டாக கற்றுக் கொடுக்கவேண்டும். அவர்கள் முதல் வகுப்பில் சேரும் போது பணக்கார வீட்டுப்பிள்ளைகளுக்கு சமமாக, அறிவு பெற்றவர்களாக உருவாக வேண்டும் என்பது தான் என் ஆசை.

சத்துணவு திட்டத்தால் 1 லட்சத்து 27 ஆயிரம் பேருக்கு வேலை கிடைத்துள்ளது.

## தற்காப்பு நடவடிக்கை

நாங்கள் ஆட்சிக்கு வந்த பின் 31 லட்சம் பேருக்குநேரடியாக நிரந்தர வேலை வாய்ப்பு தந்துள்ளோம்.

எந்த மாநிலத்திலாவது 3,4ஆண்டுகளில்இவ்வளவு அதிக வேலை வாய்ப்பு கொடுத்துள்ளார்களா?

நான் யாரைக்கண்டும் பயப்படவில்லை. மக்களின் நல்வாழ்வுக்காக கவலைப்படுகிறேன். நான்மக்களுக்காகத்தான் பதவியில் இருக்கிறேன். கருணாநிதி மறியல் போர் நடத்தப் போகிறாராம் வேடிக்கை பார்க்கக்கூட அங்கே போகாதீர்கள். கல்லெறிபவர்கள் இருப்பார்கள். காவல் துறையின் மீது கல்விழுமா? வேறு யார் மீதும் விழுமா என்று தெரியாது. எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

தடியடி, கண்ணீர்ப் புகை, எதுவும் மறியலின் போது பயன்படுத்தப் படமாட்டாது. ஆனால் உயிருக்கு ஆபத்து ஏற்படுகிற நிலை வருகிற போது காவல்துறையினர் தற்காப்பு நடவடிக்கை எடுப்பார்கள்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

முதலமைச்சர் பொது நிவாரண நிதிக்காக கோவை மாவட்டம் சார்பில் மாவட்ட கலெக்டர் பாஸ்கரதாஸ் 20 லட்சம் ரூபாய் அளித்தார்.

மாவட்ட அமைப்பாளர் கோவைத்தம்பி எம்எல்ஏ முதல்வர் புரட்சித் தலைவருக்கு பொன்னாடை போர்த்தினார்.

இன்று மாலை

ராயபுரத்தில்

## மாபெரும் கழகப் பொதுக் கூட்டம்

சென்னை, டிச. 14— கருணாநிதியின் பொய்ப் பித்தலாட்ட அரசியலைக் கண்டித்து மாபெரும் கழகப் பொதுக் கூட்டம் இன்று மாலை 7 மணிக்கு ராயபுரம் சுழல் மெத்தை அருகே நடக்கிறது.

இரா.பழனிகூட்டத்திற்கு தலைமை வகிக்கிறார். வண்ணை கோவிந்தன், திருவை அண்ணாமலை, புலவர் அறிவுடைநம்பி, மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, இரா. சோமசுந்தரம், ஏ. தாஸ், அ. தாமோதரன் மற்றும் பலர் பேசுகின்றனர்.

கலையரசன் - புஷ்பா குழுவினரின் கலைநிகழ்ச்சியும் நடக்கிறது.

# குழந்தைவேலு தகவல்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

தலைமை வகித்தார்.

கழகம் சார்பில் துரை கோவிந்தராசன் கலந்து கொண்டார். கூட்டத்தில் கலந்து கொண்ட இதர கட்சித் தலைவர்கள் பற்றிய விபரமாவது:-

நாராயணராவ் (பாரதீய ஜனதா), டி.மூர்த்தி எம். எல்.ஏ. (குடியரசு கட்சி கவாய்), செங்கம் ஜபார்-(முற்போக்கு முஸ்லிம்லீக்), தெள்ளூர் தர்மராசன் (காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ்) பிரான்சிஸ் ராயன் (கிறிஸ்தவ ஜனநாயகமுன்னணி)செய்குத் தம்பி, (தமிழ்நாடுமுஸ்லிம் லீக்), வை. பாலசுந்தரம் (அம்பேத்கார் மக்கள் இயக்கம்), சக்திதாசன் குடியரசுக்கட்சி, கோபர் கடே) மார்க்கபந்து, நக்கீரன்(உழைப்பாளர் முன்னேற்றக் கட்சி) ஆர். எஸ். மணி, (திராவிடர் கழகம்). நடராஜன் (அகிலஇந்திய பார்வர்டு பிளாக்) பரணி (தமிழ் நாடு காமராஜ் காங்கிரஸ்) டானியேல் (தேசிய கிறிஸ்தவ ஜன நாயக முன்னணி தம்பா (கிறிஸ்தவ ஐக்கிய முன்னணி), தனுஷ்கோடி ராஜா (சுதந்திரத் போராட்ட தியாகிகள் கட்சி) மற்றும் பல கட்சி தலைவர்கள் கலந்து கொண்டனர்.

உள்துறை செயலாளர் எச். பி. என். ஷெட்டியும் கூட்டத்தில் கலந்து கொண்டார்

கூட்டம் முடிந்ததும் அமைச்சர் குழந்தைவேலு நிருபர்களிடம் கூறியதாவது:-

இன்றைய அனைத்துக் கட்சிக் கூட்டத்தில் 20 கட்சியினர் கலந்து கொண்டார்கள். இன்று கூட்டத்தில்கலந்து கொண்டவர்கள் அனைவரும் பிப்ரவரி மாதம் மூன்றாவது, 4-வது வாரங்களில் ஊராட்சி, ஊராட்சி ஒன்றியம் நகராட்சி தேர்தல்களை நடத்தி முடித்திட வேண்டும் என்று ஒருமித்தக் கருத்தைத் தெரிவித்தனர் இன்று நடைபெற்ற கூட்டத்தில் திமுக, இந்திரா காங்கிரஸ், இந்திய கம்யூனிஸ்ட், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட். தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ் ஜனதா போன்றகட்சிகள் வரவில்லை.

நாங்கள் அனுப்பிய கடிதத்துக்குப் பதில் கடிதமும் அனுப்பவில்லை ஆகவே அவர்களுக்கு மீண்டும் கடிதம் அனுப்பி அவர்களது மேலான கருத்தை தெரிந்து கொள்ள வேண்டும் என்ற விருப்பத்தை முதல்வர் புரட்சித் தலைவர் வெளியிட்டிருக்கிறார்

ஜனநாயகரீதியில்எல்லா கட்சிகளுக்கும் சரிசமமான மதிப்புக் கொடுக்க வேண்டும் என்ற அடிப்படையில் இன்று இந்தக் கூட்டத்திற்கு அவர்கள் வரவில்லை என்றாலும் அவர்களது கருத்தையும் தெரிந்து கொள்ள வேண்டும் என்று இந்த அரசு விரும்புகிறது

எப்படியிருந்தாலும் 3 வது 4வது வாரங்களில் தேர்தல் நடைபெற்றே தீரும்.

தமிழகத்தில் 13 ஆயிரத்து 371 பஞ்சாயத்துக்களும் 378 ஊராட்சி ஒன்றியங்களும் 91 நகராட்சிகளும் இருக்கின்றன. பிப்ரவரி 3-வது வாரத்தில் பஞ்சாயத்து ஊராட்சி ஒன்றியத் தேர்தல்களும், 4-வது வாரத்தில் நகராட்சி தேர்தலும் நடைபெறும் இப்போது இருக்கும் சட்டத்தின்படி இடஒதுக்கீடு முறையில் தேர்தல் நடைபெறும்.

இன்றைய கூட்டத்துக்கு வராதவர்களின் பதிலையொட்டி முதல்வரைக் கலந்து கொண்டு அவரது ஆலோசனையின்படி தேர்தல் தேதி அறிவிக்கப் படும்.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.

## கிரிக்கெட்: இந்தியாதோல்வி

கல்கத்தா. டிச 14- கல்கத்தாவில் இந்தியாவுக்கும், மேற்கு இந்திய அணிக்கும் இடையே நடந்த 5வது கிரிக்கெட் டெஸ்டில் இந்தியா தோல்வி அடைந்தது.

## நூல் வியாபாரிகள் சங்க கூட்டம்

சென்னை, டிச. 14 சென்னை நூல் வியாபாரிகள் சங்கத்தின் 45-வது வருடாந்திர நிர்வாகிகள் தேர்வு கூட்டம் சென்னையில் நடைபெற்றது. கூட்ட முடிவில் தேவி சினிமா தியேட்டர் அதிபர்களில் ஒருவரான டி. என். வி. நஞ்சப்ப செட்டியார் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். மற்றும் துணைத் தலைவர்களாக ஆர். ஒய். சிங்கார முதலியார், எஸ். எஸ். மோகன்லாலும், கவுரவ செயலாளர்களாக அரீஷ், சோக்ஷி, கூட்டு கவுரவ செயலாளராக எம். லோகநாதன், கவுரவ பொருளாளராக ஞானவேலுவும், மேலும் 4 பேர் கமிட்டி உறுப்பினர்களாக தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# ப. உ. ச கடிதம்

(முதல் பக்கத் தொடர்ச்சி)

கர்நாடக மாநில முதல்வர் இராமகிருஷ்ண ஹெக்டே, ஆந்திர முதல்வர் என் டி. இராமராவ், புதுவைலெப்டினட்கவர்னர்பிரபாகரராவ், மேலவைத் தலைவர் சிலம்புச் செல்வர், நிதிஅமைச்சர் நாவலர், அமைச்சர் ஆர். எம். வீரப்பன், நடிகர்திலகம்சிவாஜி, இளைஞர்களின் இதயங்களைத் தடவும் இயக்குனர் பாரதிராஜா, இன்றைய திரை உலக இளையத் தலைமுறையின் ஈடற்ற இளவரசன் பாக்கியராஜ், கலையுலக இராணிகளாகத் திகழும் கே. ஆர். விஜயா, ஹேமமாலினி ஆகியோர் வந்தனர்!

நாமகிரிப்பேட்டையின் மங்கள இசையோடு குழலை வெல்லும் திறம் வாய்ந்த யாழிசைமன்னன் குன்னக்குடிவைத்திய நாதன் மாண்டலின்சீனிவாசன், இசை அமைக்கும் இரட்டையர்களான சங்கர்-கணேஷ் ஆகியோர் தமிழக முதல்வருக்குத் தங்கள் திறமைகளை காணிக்கையாக்கிக் காட்டினர்!

நாடாளுமன்ற அவைத்தலைவர் மாண்புமிகு பலராம் ஜாக்கர் அவர்கள் விழாவின் சிறப்பை ''எம். ஜி. ஆரின் மனிதாபிமான உணர்வுக்கும், ஏழைகளை வாழவைக்க வேண்டுமென அவர் கொண்டுள்ள ஆர்வத்துக்கும். நேர்மைக்கும், நாணயத்துக்கும் நடத்தப்படும் விழா'' என்று கூறினார்.

கர்நாடக முதல்வர் அவர்களோ ''தென்மாநில முதல்வர்களுக்கு எம் ஜி. ஆர் தான் வழிகாட்ட வேண்டும்'' என்றார்!

ஆந்திர முதல்வர் 'அண்ணன்-தம்பி' என்ற தன்பாசத்தை வெளிப்படுத்தினார்!

நடிகர் திலகம் சிவாஜியோ தனக்கே உரித்தான முறையில் பாசபிணைப்பை வெளிப்படுத்தினார்!

கலைஞர்கள் தங்கள் நாவன்மையைக் காட்டி மக்கள் திலகத்தின் திறமையைப் பாராட்டினார்கள்!

எவரும் எந்தவித குற்றம் குறையும் காண இயலாத வகையில் இரண்டு நாள் நிகழ்ச்சிகளும் அமைந்திருந்தன.

புரட்சித்தலைவர் கலைஉலகில் இருந்தபோது முடிசூடா மன்னன்! அரசியலில் வந்தார்... இப்போது இங்கும் நிகரில்லா மன்னன்!

புரட்சித்தலைவர்  
அன்புக்கு அடிமை  
ஆணவம் அண்டாத மனிதர்  
இனிய குணம் படைத்தவர்  
ஈகை கரம் உடையவர்  
உதவிட பிறவி எடுத்தவர்  
ஊதியம் அனைத்தையும் கொடுத்தவர்  
எதையும் தாங்கும் இதயம் பெற்றவர்  
ஏசியவர் துயரையும் துடைக்கக்கற்றவர்  
ஒருபோதும் ஈன்றாளை மறவாதவர்  
ஓயாது உழைத்தும் சலியாதவர்  
இவர்  
அண்ணாவின் அருமைத் தம்பி  
எந்நாளும் மக்களையே நம்பி  
வாழ்கின்ற எம்மான்  
வாழவைக்க வந்த பெம்மான்!  
கள்ளமிலா நெஞ்சங் கொண்டு  
வள்ளல்கள் வழியில் நின்று நல்ல  
உள்ளமெல்லாம் உவந்து வாழ்த்த  
பிள்ளைகள் தம்பசியைக் கொன்றாய்!  
வாழி! நீ வாழி! பல்லாண்டு வாழி

இப்பெருவிழாவிற்கு மாண்புமிகு இராசாராமிற்கு உற்றதுணையாக இருந்து உதவிய சட்ட அமைச்சர் மாண்புமிகு பொன்னையன், பாவலர் முத்துசாமி, மாவட்டச் செயலாளர் கண்ணன், ஜெயராம், கே பி. செல்வராஜ். மற்றும் சட்டமன்ற உறுப்பினர்களும்நகர ஒன்றியச் செயலாளர்களும், மன்ற மறவர்களும், ஆற்றிய தொண்டுதான் விழாவிற்கு மேலும் சிறப்பு சேர்த்தது.

அனைவருக்கும் நம் வாழ்த்துக்கள்.

அன்புள்ள

ப. உ. ச.

கழக கொள்கைபரப்பு செயலாளர்

## செல்வி ஜெயலலிதா அவர்களின் சுற்றுப்பயண விவரம்

### சேலம் மாவட்ட நிகழ்ச்சிகள்

| | | | | |
|---|---|---|---|---|
| 18—12—83 | மதியம் | 2·00 | மணிக்கு | கொண்டலாம்பட்டி பொதுக்கூட்டம் |
| | மதியம் | 2·30 | ,, | இடைப்பாடி பொதுக்கூட்டம் |
| | மாலை | 3·00 | ,, | சங்ககிரி பொதுக்கூட்டம் |
| | மாலை | 5·00 | ,, | கொமாரபாளையம் பொதுக்கூட்டம் |
| 19—12—83 | மதியம் | 1·00 | மணிக்கு | அயோத்தியாபட்டினம் பொதுக்கூட்டம் |
| | மதியம் | 2·00 | ,, | வாழப்பாடி பொதுக்கூட்டம் |
| | மாலை | 3·00 | ,, | ஆத்தூர் பொதுக்கூட்டம் |
| | மாலை | 4·00 | ,, | கெங்கவல்லி பொதுக்கூட்டம் |
| | மாலை | 5·00 | ,, | இராசிபுரம் பொதுக்கூட்டம் |
| 20—12—83 | மதியம் | 1·00 | மணிக்கு | ஐந்து ரோடு பொதுக்கூட்டம் |
| | மதியம் | 2·00 | ,, | ஓமலூர் பொதுக்கூட்டம் |
| | மாலை | 3·00 | ,, | தாரமங்கலம் பொதுக்கூட்டம் |
| | மாலை | 5·00 | ,, | மேட்டூர் பொதுக்கூட்டம் |
| 21—12—83 | மதியம் | 1·00 | க்கு | ஆட்டையாம்பட்டி பொதுக்கூட்டம் |
| | மாலை | 3·00 | | சேந்தமங்கலம் பொதுக்கூட்டம் |
| | மாலை | 4·00 | | பாண்டமங்கலம் பொதுக்கூட்டம் |
| | மாலை | 5·00 | ,, | நாமக்கல் பொதுக்கூட்டம் |

### மதுரை மாவட்ட நிகழ்ச்சிகள்

| | | | |
|---|---|---|---|
| 27—12—83 | காலை | மதுரை வருகை | |
| | மாலை | தேவாரம் | அரசு நிகழ்ச்சிகள் |
| | மாலை | சின்னமனூர் | கொடியேற்றுவிழா |
| | இரவு | கம்பம் | பொதுக்கூட்டம் |
| | இரவு | தேனி | பொதுக்கூட்டம் |
| 28—12—83 | மாலை | பேரையூர் | கொடியேற்றுவிழா |
| | மாலை | திருமங்கலம் | கொடியேற்றுவிழா |
| | இரவு | திருப்பரங்குன்றம் | பொதுக்கூட்டம் |
| | இரவு | மேலூர் | பொதுக்கூட்டம் |
| | இரவு | நத்தம் | கொடியேற்றுவிழா |
| 29—12—83 | மாலை | சமயநல்லூர் | கொடியேற்றுவிழா |
| | மாலை | வாடிப்பட்டி | கரும்புவிவசாயிகளபாராட்டுவிழா |
| | மாலை | சோழவந்தான் | கொடியேற்றுவிழா |
| | மாலை | நிலக்கோட்டை | கொடியேற்றுவிழா |
| | மாலை | வத்தலக்குண்டு | கொடியேற்றுவிழா |
| | இரவு | பெரியகுளம் | பொதுக்கூட்டம் |
| 30—12—83 | மாலை | அய்யம்பாளையம் | கொடியேற்றுவிழா |
| | மாலை | வேடசெந்தூர் | கொடியேற்றுவிழா |
| | மாலை | ஒட்டன்சத்திரம் | கொடியேற்றுவிழா |
| | இரவு | பழனி | பொதுக்கூட்டம் |
| 31—12—83 | மாலை | திண்டுக்கல் | பேரணி-பொதுக்கூட்டம் |



விளம்பர நிறுவனம்

## "எலிகண்ட்" பங்குதாரர் மூர்த்தி காலமானார்

சென்னை, டிச. 14— சென்னையில் உள்ள பிரபல விளம்பரநிறுவனம் "எலிகண்ட்' பங்குதாரர் எஸ். மூர்த்தி கடந்த ஞாயிற்றுக் கிழமை காலமானார். அவருக்கு வயது 33.

அவருக்கு மனைவியும் ஒரு மகள், ஒரு மகன் உள்ளனர். வேலூரில் உள்ளசி.எம்,சி. மருத்துவ மனையில் சிறிது காலம் அவர் சிகிச்சை பெற்று வந்தார்.

97-வது வட்ட

## கழகப் பொதுக் கூட்டம்

சென்னை, டிச 14— சென்னை 97-வது வட்டத்தை சேர்ந்த புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். மன்றத்தின் சார்பில் திருவல்லிக்கேணி வெங்கட்ரங்கம் பிள்ளைத் தெருவில் நாளை [15-ந் தேதி] மாலை 7 மணிக்கு கழகப் பொதுக்கூட்டம் நடக்கிறது.

கூட்டத்திற்கு எஸ். நீலகண்டன் தலைமை வகிக்கிறார். வி. செல்வமணி, செ. கோ. கண்ணன் முன்னிலையில் நடக்கும் இந்தக் கூட்டத்தில் கேரளசுந்தரம், திருவை அண்ணாமலை, சென்னை மாவட்ட எம். ஜி. ஆர், மன்ற செயலாளர் இ. மதுசூதனன், ஜெ பாலன், வி. ராஜ்குமார். பி. ஆர். மோகன், மயில் வாகனன், மனோகரன், எம். சி. ரவீந்திரன் மற்றும் பலர் பேசுகின்றனர்.




PUBLISHED BY K.RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D. M. K. PERARIGNAR ANNA TRUST PRESS AT 34, NELSON MANICKAM ROAD MADRAS-600 029. Editor E.PARASURAMAN


எதிர்காலத் தேவையைப் பொறுத்து

திட்டமிடுகிறோம்: தமிழகத்தில்

# பாலிடெக்னிக்குகள் பெருக வேண்டும்: முதல்வர் விருப்பம்

## திருப்பூர் பாலிடெக்னிக் திறப்பு விழாவில் பேச்சு

**திருப்பூர், டிச 14. தமிழ்நாட்டில் மேலும் பாலிடெக்னிக்குகள் பெருக வேண்டும் என முதல்வர் புரட்சித்தலைவர் விருப்பம் தெரிவித்துள்ளார்.**

திருப்பூர் கலைமகள் பாலிடெக்னிக் துவக்க விழா கல்வியமைச்சர் அரங்கநாயகம் தலைமையில் நடந்தது.

அரசுக் கொறடா திருப்பூர் மணிமாறன் வரவேற்றுப் பேசினார்.

தொழில் நுட்பக்கல்லூரியைத் திறந்து வைத்து முதல்வர் புரட்சித்தலைவர் பேசும்போது கூறியதாவது:—

திருப்பூர் நகரத்துக்கு வந்தால்இங்குள்ளமாஜிஸ்திரேட் கோர்ட்டில் நான் முன்பு நின்றிருந்தது எனக்கு நினைவுக்கு வருவதுண்டு.

அதோடு வழக்கறிஞர் சாகுல் அமீது நினைவும் எனக்கு வரும்,

என்மீது திமுக ஆட்சியின்போது வழக்கு தொடர்ந்தார்கள். அப்போதுபலன்எதையும்எதிர்பார்க்காமல் சாகுல அமீது கடமையாற்றி நியாயத்தின் அடிப்படையில்வெற்றி தேடித் தந்தார். அவருக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

நான் பள்ளிக்கூடத்தில் 3-வது வகுப்பு வரை படித்தேன். அதன் பிறகு நாடகத்தில் நடித்தேன். பிறகு சினிமாத் துறைக்கு வந்தபின் தனியாக ஆசிரியரை வைத்து மேலும் படித்தேன். வசதியற்றவர்கள் எத்தனையோ பேர் உள்ளனர். அவர்களுக்கெல்லாம் படிப்பதற்குவாய்ப்புஏற்படுத்திக் கொடுக்க வேண்டும்.

திருப்பூர் மணிமாறன் இங்கு பேசும்போது மகிழ்ச்சியாக இங்கு விழா நடப்பதால் நாளையே தனக்கு உயிர்போனாலும்மகிழ்ச்சிதான் என்று கூறினார்.

### நன்மைகள் நிலையானவை

நீர்க்குமிழிபோல் வாழ்க்கை என்று சொல்வார்கள். வாழ்க்கை என்பது நிலையானது அல்ல. நாம் செய்யும் நன்மைகள் தான் நிலையானவை.

''ஒன்றே செய்க, நன்றே செய்க, அதுவும் இன்றே செய்க'' இதைத் தான் கூற விரும்புகிறேன்.

மணிமாறனைப் போன்ற இளைஞர்கள் சாவு பற்றி இந்த வயதிலேயே கூறக் கூடாது. அச்சம் தவிர்க்கவேண்டும். சுயநலமின்றி ஒவ்வொருவரும் வாழக் கற்றுக் கொள்ள வேண்டும். அப்படி வாழ்வதானால் அச்சத்தைத் தவிர்க்க முடியும்.

அறிவு சார்ந்த உலகம் எதிர்காலசந்ததியின் நலத்தையே சிந்திக்கிறது. திருப்பூரில் பாலிடெக்னிக் அமைய வேண்டும் என்பதற்காக என்னிடம் வாதாடி வந்தவர் திருப்பூர்மணிமாறன்.

கலைக் கல்லூரிகள் நிறைய அமைவதை விட பாலிடெக்னிக்குகள் அமைவது எதிர்கால சந்ததிக்கு நன்மை பயப்பதாகும். அந்த மகிழ்ச்சியில் இந்த விழாவுக்கு வந்திருக்கிறேன்.

பி.ஏ.-எம்.ஏ, பட்டம் பெற்று வருபவர்களிடம் ''என்ன வேலை பார்க்க போகிறாய்?'' என்று கேட்டால் ''அதுபற்றிதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்'' என்று பதில் சொல்வார்கள்.

### தொழில்வளம் பெருகவேண்டும்

ஒவ்வொருவரும் தங்கள் மகன் படித்து பெரியவனாகி வேலைவாய்ப்புப் பெற்று தனது குடும்பத்துக்கு உதவவேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள்.

இன்றைக்கு படித்துக் கொண்டிருப்பவர் படித்து முடித்ததும், உடனே அவர்களுக்கு தொழில்கிடைக்க தொழில்வளம் பெருக வேண்டும். தொழிற்கல்வி கூடங்களை அதிகரிக்க வேண்டும்.

அதேபோல் தொழில் வளத்தையும் பெருக்க வேண்டும். தற்போது 65 லட்சம் குழந்தைகள் சத்துணவு சாப்பிடுகிறார்கள். இந்த 65 லட்சம் குழந்தைகளில் 6 வயது முதல் 10வயதுக்குட்பட்டவர்கள்.

சுமார் 30 லட்சம் பேர் இருப்பார்கள். இன்னும் 15 ஆண்டுகள் கழித்து அவர்களுக்கு 25 வயது ஆகும்போது அவர்களுக்கு தொழிலைச் செய்ய வேண்டியது அவசியமாகிறது.

15ஆண்டுகளுக்குப்பிறகு யார் ஆட்சிக்கு வந்தாலும் இந்த 30 லட்சம் பேர் பிரச்னைகளை அவர்கள் கவனிக்க வேண்டி வரும்.

அப்போது அந்த அரசு எவ்வாறு அவர்களுக்கு வேலைகொடுக்கமுடியும்? எனவேதான் இதையெல்லாம் மனதில் வைத்து திட்டங்கள் தீட்டி பாடுபட்டு வருகிறோம்.

### அவர்கள் சிந்திக்கவில்லை

இந்தப் பிரச்னை பற்றி முன்பு ஆட்சியில் இருந்தவர்கள் சிந்தித்தார்களா? அப்படி சிந்தித்திருந்தால் வேலைஇல்லா திண்டாட்டம் தற்போது தீர்ந்திருக்கும்.

நாங்களும் இதுபோன்ற திட்டமில்லாமல் வேறு மாதிரியான திட்டங்கள் குறித்து சிந்திப்பதற்கு வாய்ப்பு ஏற்பட்டிருக்கும். இங்கே அமைந்துள்ளது போலபாலிடெக்னிக்குகள் பெருகவேண்டும். குழந்தைகளின் விருப்பத்திற்கு ஏற்றபடி அவர்களுக்கான தொழிற் கல்வியை தேர்ந்தெடுக்க வேண்டும். ஒரு தொழிலை செய்யும்போது அதில் நல்ல லாபம் வந்தால் மேலும் பல பேர் அதே தொழிலைச் செய்ய முற்படுகிறார்கள். இதனால் யாருக்கும் நல்ல லாபம் கிடைப்பதில்லை. எனவே பல்வேறு விதமான புதிய தொழில்கள் தொடங்க வேண்டும்.

அன்றாடத் தேவைக்கு வேண்டிய பொருட்களை மீண்டும் மீண்டும் பயன்படுத்தக்கூடிய பொருட்களை உற்பத்தி செய்ய வேண்டும் அப்போதுதான் வேலை வாய்ப்புகள் பெருகும்.

இங்கே ஜெயப்பிரகாஷ் சத்துணவுக் கூடத்துக்கு நிலம் கொடுத்தார். அவருக்கு என் நன்றி. அவர் வாழ்க என வாழ்த்துகிறேன். உணவுக்குக் கஷ்டப்பட்டவர்களுக்குத்தான் சத்துணவு திட்டத்தின் சிறப்பு தெரியும். பாலிடெக்னிக்கு தொடங்குவதுபெரிதல்ல. அது நன்கு வளர்ந்து பரவ வேண்டும். நான் வெளி நாட்டுக்குச் சென்றபோது அங்கே மாணவர்களைச் சந்தித்தேன். அவர்கள் அக்கறையுடன் படிக்கிறார்கள். இங்கேஆசிரியர்கள் வந்து மாணவர்களை கேள்வி கேட்பது போல அங்கே மாணவர்கள் ஆசிரியர்களிடம் கேள்வி கேட்கிறார்கள்.

### மாணவர்கள் கேள்வி

மாணவர்கள் கேள்வி கேட்டால் அதற்கான விடை தெரியாத நிலை ஏற்படும்போது ஆசிரியர் கோபப்படக் கூடாது. மேலும் படித்து அறிவை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

நான் வெளிநாடு சென்றிருந்தபோது ஒரு நண்பர் எனக்கு கார் வசதி செய்து தந்திருந்தார். ஒரு நாள் அவர் வந்து தனக்குஇன்றுவேறு வேலை இருப்பதாகவும் எனவேஇன்னொருநண்பர் கார் ஓட்டி உதவுவார் என்றும் சொன்னார். அதற்கு நான் இன்று ஒரு நாள் தானே நீங்களே கார் ஓட்டுங்களேன் என்று சொன்னேன்.

அதற்கு அவர் நான் ஆசிரியராக வேலை பார்க்கிறேன். நான் தாமதமாகப் போனால் மாணவர்களுக்கு பதில் சொல்லி முடியாது என்று அவர் பதிலளித்தார்.

### நல்லுறவு வேண்டும்

மற்றொரு ஆசிரியருக்கு அவரது பள்ளியில் நடந்த சம்பவத்தையும் அவர் நினைவு படுத்தினார். ஒரு ஆசிரியர் வகுப்புக்கு 10 நிமிடம் தாமதமாக வந்தார். உடனே மாணவர்கள் அந்த ஆசிரியரிடம் கேள்வி கேட்டார்கள். நீங்கள் ஆசிரியர், படித்து முடித்தவர். 10 நிமிடத் தாமதம் என்பது உங்களுக்கு நல்லதல்ல. நாங்கள் படிக்கும் மாணவர்கள். எனவே எங்களுக்கு அந்த 10 நிமிடமும் மிக முக்கியமானது என்று மாணவர்கள் சொன்னார்கள் என்ற விவரத்தை வெளிநாட்டில் என்னிடம் தெரிவித்தார்கள்.

ஆகவே மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் ஒரு நல்ல உறவு நிலை ஏற்படும் வகையிலும் மாணவர்களின் அய்யப்பாடுகள் எல்லாம் தீரும் வகையிலும் பாடமுறை அமைய வேண்டும். இங்கே உள்ள உங்கள் அனைவரையும் நான் கேட்டுக்கொள்வது பள்ளிக்கூடம், கல்லூரிகள் முதலியவற்றை மூட அனுமதிக்காதீர்கள் என்பது தான்.

ஏதாவது தவறு நடந்தால் நமக்கு ஏன் கெட்ட பெயர் என்று பெரியவர்கள் ஒதுங்கிக்கொள்ளக் கூடாது. அப்படி ஒதுங்கினால் கெட்டவர்கள் தான் வளர்வார்கள்.

### வேலைக்கு செல்லுங்கள்

பெரியவர்கள் தங்களுக்கு எதுநியாயம் என்று தெரிகிறதோ- அதைத்துணிந்து சொல்ல வேண்டும்.

நான் அவசரமாக சென்னைக்குப் போக இருக்கிறேன். ஏன் என்பது உங்களுக்குத் தெரியும்.

மறியல் போராட்டம் என்று சொல்கிறார்கள். 15-ந் தேதியன்று வேடிக்கை பார்க்கக் கூட வெளியே போகாதீர்கள். நல்லவர்கள் அனைவரும் அன்றைய தினம் வேலைக்குச் செல்லுங்கள்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

முதல்வர் புரட்சித் தலைவருக்கு குழந்தைகள் உட்பட பலர் மாலை அணிவித்தனர்.

பாலிடெக்னிக் திறப்பு விழாவுக்கு வந்த புரட்சித் தலைவரை மாணவர்கள் மலர் தூவிவரவேற்றனர்.

விழாவில் அமைச்சர்கள் அரங்கநாயகம், குழந்தைவேலு, ராகவானந்தம், முத்துசாமி, திருச்சி சவுந்தரராசன், அரசுக் கொறடா திருப்பூர் மணிமாறன், திருக்குறள் முனுசாமி, சவுந்திரா கைலாசம், ஜி. வரதராஜ் எம். பி. மற்றும் எம். எல். ஏ.க்கள், நகரப் பிரமுகர்கள் ஆகியோர் கலந்து கொண்டனர்.



அமைச்சர் யூசுப் தகவல்

## காவிரி நீர் பிரச்சினை சுமுகமாக தீரும்

சென்னை, டிச. 14- தமிழக நீர்ப் பாசனத் துறை அமைச்சர் யூசுப் நிருபர்களுக்கு பேட்டி அளிக்கையில் கூறியதாவது:-

கர்நாடக முதல்வர் ஹெக்டே பேச்சினை பார்க்கும் போது காவிரி நீர்ப் பிரச்சினைகள் இன்னும் இரண்டொருநாளில் ஓரளவு தெளிவாகும் என்றே தெரிகிறது.

தமிழகத்திற்கு 35 டி. எம். சி. தண்ணீர் தேவைப் படுகிறது. ஆனாலும் கர்நாடகம் 30 டி. எம், சி. தண்ணீர் கொடுத்தாலே போதுமானது.

ஆனால் அவர்களோ தங்களுக்கு தண்ணீர் பற்றாக்குறை இருக்கிறது என்று கூறியிருக்கிறார்கள் கர்நாடக முதல்வரும் அவரது நீர்ப்பாசனத்துறை அமைச்சரும் பேசிய பிறகு தமிழக முதல்வர் புரட்சித்தலைவரின் முடிவுப்படிஇப்பிரச்சினையில் ஒரு சுமுகமான தீர்வு ஏற்படும் என்று நம்புகிறேன்.

இவ்வாறு அமைச்சர் யூசுப் கூறினார்.

சென்னை பல்கலைக்கழகத்தில்

## புரட்சித்தலைவர் பெயரில் ஒரு அறக்கட்டளை

சபா நாயகர் ராசாராம் அறிவிப்பு

**சேலம், டிச 14.- முதல்வர் புரட்சித்தலைவர் பெயரில் சென்னை பல்கலைக்கழகத்தில் ஒரு அறக்கட்டளை நிறுவப்படும் என்று பேரவை தலைவர் ராசாராம் அறிவித்தார்.**

டாக்டர் பட்டம்பெற்ற முதல்வர் புரட்சித்தலைவருக்கு சேலத்தில் நடந்த பாராட்டு விழாவில் சபாநாயகர் ராசாராம் கூறியதாவது:-

இந்த விழாவில் கூடினோம், கலைந்தோம் என்று இல்லாமல் இந்த விழாவின் நினைவு எதிர் காலத்தில் என்றென்றும் நீக்கமற நிறைந்து இருக்க வேண்டும்.

இதற்காக ஒரு திட்டத்தை நான் தயாரித்தேன். நண்பர்களும் அதை ஆதரித்துள்ளனர்.

பொன்மனச் செம்மல், முதல்வர்புரட்சித்தலைவர் ஒரே ஒருநாள் மட்டும் பாராட்டப்பட வேண்டிய தலைவர் இல்லை.

முதல்வர் புரட்சித் தலைவரது செயல்கள், செய்த சாதனைகள், வாரி வாரி வழங்கிய வள்ளல் தன்மைகள், நடிப்புத்துறையிலும், அரசியல் துறையிலும் புரிந்துள்ள வரலாறு ஆகியவற்றை எதிர்கால உலகமும் என்றென்றும் அறிந்துகொள்ளச் செய்ய வேண்டும்.

அந்த வகையில் சென்னை பல்கலைக் கழகத்தில் புரட்சித்தலைவர் ''எம். ஜி. ஆர். அறக்கட்டளை'' என்ற பெயரில் ஒரு அறக்கட்டளை அமைக்கப்படுமென்பதைமகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

முதல்வர் புரட்சித்தலைவருக்கு சென்னை பல்கலைக் கழகம் டாக்டர் பட்டத்தை வழங்கியது.

பேரறிஞர் அண்ணாவின் பெயரால் ஒரு அறக்கட்டளை நிறுவ ரூ. 21 லட்சத்தை அனைத்திந்திய அண்ணா திமுகழகத்தின் சார்பில் வழங்கி அண்ணாவின் பெயரை நிலைப் படுத்தி இருக்கிறார்.

அவர் வழங்கிய அளவுக்கு என்னால் வழங்க இயலாது.

ரூ. 25 ஆயிரம் அளவில் ''புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். அறக்கட்டளை'' என்றபெயரில் சென்னை பல்கலைக் கழகத்தில் ஒரு அறக் கட்டளையை நிறுவுவதற்காக முடிவு செய்து அதற்கான முயற்சியில் இறங்கியுள்ளேன்.

விரைவில் இந்த அறக் கட்டளை அமைக்கப்படும்.

இவ்வாறு சபாநாயகர் ராசாராம் கூறினார்.

தமிழ்நாடு ஜனதா தலைவராக

## செழியன் தேர்வு

கோயம்புத்தூர், டிச. 14 தமிழ் நாடு ஜனதா கட்சி தலைவராக இரா. செழியன் எம். பி தேர்ந்தெடுக்கப் பட்டார். குமரி அனந்தன் எம். எல். ஏ வைவிட 19 ஓட்டுகள் அதிகம் பெற்று செழியன் வெற்றி பெற்றார்.

நேற்று கோவையில் நடைபெற்ற தேர்தலில் இரா. செழியன், குமரி அனந்தன், பி. விஜய ராகவன் எம். எல். ஏ., முகமது இஸ்மாயில், ஆறுமுகம், எஸ். எஸ். ராகவாச்சாரி ஆகிய6பேர்போட்டியிட்டனர். செழியனுக்கு83ஓட்டுகளும், குமரிஅனந்தனுக்கு 64 ஓட்டுகளும், முகமது இஸ்மாயிலுக்கு 47ம், ஆறுமுகத்துக்கு 1 ஓட்டும், ராகவாச்சாரிக்கு 2 ஓட்டுகளும் கிடைத்தன

பொதுக்குழு உறுப்பினர்கள் 257 பேர்களில் 251 பேர்களே ஓட்டு அளித்தனர் ஜெபமணி உள்பட 6 பேர் ஓட்டுப் போடவில்லை.

ஆறுமாத காலத்திற்குள்

## ரூ. 8 கோடியில் 5 கூட்டுறவு நூற்பாலைகள்

அமைச்சர் திருநாவுக்கரசு தகவல்

**நாகர்கோவில், டிச 14- ஆறுமாத காலத்திற்குள் ரூ. 8 கோடி செலவில் 5 கூட்டுறவு நூற்பாலைகள் அமைக்கப்படும் என்று அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.**

ஆரல் வாய்மொழியில் நடந்த ஒரு விழாவில் அமைச்சர் திருநாவுக்கரசு கலந்துகொண்டு பேசினார்.

கன்னியாகுமரிமாவட்ட கூட்டுறவு நூற்பாலை ஊழியர்கள் கூட்டம்ஆரல் வாய் மொழியில் நடந்தது.

இந்தக் கூட்டத்தில் அமைச்சர் திருநாவுக்கரசு கலந்து கொண்டு பேசியதாவது:-

எட்டுகோடிரூபாய்செலவில் 5 கூட்டுறவு நூற்பாலைகள் அமைக்க திட்டமிடப்பட்டுள்ளது.

ராமநாதபுரம், புதுக்கோட்டை, தருமபுரி, திருநெல்வேலி, மதுரை ஆகிய 5 மாவட்டங்களில் இந்த ஆலைகள் அமைக்கப்படும்.

ஒவ்வொரு நூற்பாலையும் ஒரு லட்சத்து 25 ஆயிரம் கதிர்கள் கொண்டதாக இருக்கும்.

இந்தஆலைகள்இன்னும் 6 மாத காலத்திற்குள் செயல்படத் தொடங்கும்.

ரூ. 200 கோடி செலவில் திருச்சி அருகே புகளூரில் காகித ஆலை தொழிற் சாலை உருவாகிவருகிறது

அடுத்த ஆண்டு இறுதியில் இந்த ஆலை காகித உற்பத்தியை துவக்கும்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

## ஜனாதிபதி ஜைல்சிங் தேர்தல் செல்லும்: சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு

புதுடெல்லி, டிச. 14- ஜனாதிபதியாக ஜைல்சிங் தேர்ந்தெடுக்கப்பட்டது அரசியல் சட்டப்படி செல்லும் என்று சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்துள்ளது.

லோக்தளம் ஜனநாயக சோஷலிசக்கட்சி, பாரதிய ஜனதா மற்றும் ஜனதா ஆகிய கட்சிகளைச் சேர்ந்த 27 எம். பிக்கள் இந்த வழக்கை தொடுத்திருந்தனர்.

தலைமை நீதிபதி சந்திரசூட் தலைமையில் 5 நீதிபதிகள் கொண்ட ''பெஞ்ச்'' இதை விசாரித்து வழக்கை தள்ளுபடி செய்தது.

ஜனாதிபதி பதவி வகிக்க ஜைல்சிங் தகுதியானவர் அல்ல என்ற குற்றச்சாட்டு பொருத்தமற்றது என்றும் சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்தது.

# தாய்மார்களே! பெரியோர்களே!

# ஒரு நிமிடம் சிந்திப்பீர்!

திருவாளர் கருணாநிதி ஆட்சியில் ஒரு கிலோ அரிசி 10 ரூபாய்.

காசு கொடுத்தாலும் அரிசி இல்லை. மக்கள் பையும், கையுமாக அரிசிக்கு அலையோ அலை என்று வீதி வீதியாக அலைந்தார்கள்.

**அன்றைக்கு லஞ்சத்திற்கு ஆசைபட்டு ஒரு லட்சம் இரு லட்சம் அல்ல! ஒன்பது லட்சம் டன் அசிரியை கேரளத்திற்குக் கடத்திய புண்ணிய வான்தான் கருணாநிதி. அதன் மூலம் தமிழகத்திற்குச் செயற்கை பஞ்சத்தைக் பரிசாகத் தந்தவர்தான் அந்தக் கருணாமூர்த்தி.**

கருணாநிதி ஆட்சியில் அரிசிக்கும், பஞ்சம்; மண்ணெண்ணெய்க்கும் பஞ்சம்.

அன்றைக்குப் பருப்பு விலை உயர்வுக்கு பஞ்சாப் காரணம் என்றார். எண்ணெய் விலை உயர்வுக்கு குஜராத் காரணம் என்றார். மொத்தத்தில் விலைவாசி உயர்வுக்கே மத்திய அரசே காரணம் என்றார். விலைவாசியைக் கட்டுப் படுத்தும் அதிகாரமோ பொறுப்போ மாநில அரசுக்கு இல்லை என்றார் கருணாநிதி.

இன்றைக்கு மாண்புமிகு முதல்வர் புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். அவர்களின் ஆட்சியில், ஒரு கிலோ அரிசி நியாயவிலைக்கடைகளில் அதிக பட்சம் இரண்டு ரூபாய். வெளி மார்க்கெட்டில் நான்கு ரூபாய்.

ஆனாலும் ஒரு கிலோ அரிசி பத்து ரூபாய் என்று விற்ற கருணாநிதி விலைவாசியை எதிர்த்துப் போராடப் போகிறாராம்!

1976ல் இருந்த விலைவாசி என்ன—இன்றைக்கு 1983ல் இருக்கின்ற விலைவாசி என்ன என்று கருணாநிதி பட்டியல் போட்டு காட்டுகிறார்.

நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்—1976ம் ஆண்டு ஜனவரி மாதமே கருணாநிதி அரசு பதவி இறக்கம் செய்யப்பட்டது.

அப்போது நாட்டில் அவசர நிலை—எமர்ஜென்சி நிலை இருந்தது. எனவே 1976ல் இந்தியா முழுவதிலும் விலைவாசி ஒரு கட்டுக்குள் இருந்தது, தமிழ்நாட்டிலும் இருந்தது.

ஆனால் அதற்குக் காரணம் அவசர நிலைதானே தவிர—நிச்சயமாக கருணாநிதி அல்ல.

அவசர நிலையினால் ஏற்பட்ட விலைவாசி கட்டுப்பாட்டிற்கு கருணாநிதி எப்படி சொந்தம் கொண்டாடலாம்?

கருணாநிதி முதல்வராக பொறுப்பேற்ற போது இருந்த விலைவாசி என்ன-அவருடைய ஆட்சிக் காலத்தில் 1974-75ம் ஆண்டில் இருந்த விலைவாசி என்ன?

### இதோ ஒரு பட்டியல்...!

| | | 1969-ம் ஆண்டு கருணாநிதி முதல்வரான போது | கருணாநிதி ஆட்சியில் 1974-75ம் ஆண்டு |
|---|---|---|---|
| அரிசி | (ஒரு கிலோ) | ரூ. 3-50 | ரூ. 10-00 |
| தேங்காய் எண்ணெய் | ,, | ரூ. 8-40 | ரூ. 14-00 |
| கடலை எண்ணெய் | ,, | ரூ 8-50 | ரூ 11-00 |
| புளி | ,, | ரூ. 3 50 | ரூ. 8-00 |

இந்த விலைவாசி உயர்வுக்கு யார் காரணம்...? தானே காரணம் என்று கருணாநிதி ஒப்புக் கொள்கிறாரா...? அன்றைக்குக் கருணாநிதி விலைவாசியைக் கட்டுப்படுத்தியிருந்தால் இன்றைக்கு இந்த அளவுக்கு விலைவாசி உயர்ந்திருக்குமா? அன்றைக்கு ஏன் கருணாநிதியால் விலைவாசி உயர்வைக் கட்டுப் படுத்த முடியவில்லை?

கருணாநிதி ஆட்சியில் ரூபாயின் மதிப்பு 36 காசு. அந்த நிலையில் ஒரு கிலோ அரிசி 10 ரூபாய்.

இன்றைக்கு ரூபாயின் மதிப்பு 18 காசு. ரூபாயின் மதிப்பு வீழ்ச்சி அடைந்தால் விலைவாசி உயரும். என்றாலும் இன்றைக்கு ஒரு கிலோ அரிசி நியாய விலைக் கடைகளில் அதிக பட்சம் 2 ரூபாய், வெளிமார்க்கெட்டில் 4 ரூபாய்.

இன்றைக்குக் கருணாநிதி ஆட்சியில் இருந்தால் இதே விலைவாசி எப்படி உயர்ந்திருக்கும்? ஒரு கிலோ அரிசி 20 ரூபாய் என்று அல்லவா உயர்ந்திருக்கும்?

பொதுவாக தங்கத்தின் விலையைப் பொறுத்துத் தான் மற்ற பொருட்களின் விலைவாசியை நிர்ணயிக் கிறார்கள். தங்கத்தின் விலை உயர்ந்தால் பிற பொருட் களின் விலைவாசி உயரும் என்பது நியதி.

ஒரு பவுன் (8 கிராம்) தங்கத்தின் விலை 1971-ம் ஆண்டு 150 ரூபாய் 60 காசு.

இன்றைக்கு 1983ல் ஒரு பவுன் தங்கத்தின் விலை 1560 ரூபாய்.

அந்த அளவுக்கு இன்றைக்கு அரிசி விலை உயர்ந்திருக்கிறதா?

பத்து மடங்கு கூடியிருக்கும் தங்கத்தின் விலையோடு ஒப்பிடும்போது - ஒரு கிலோ அரிசியின் விலை 100 ரூபாயாக உயர்ந்திருக்க வேண்டும். இல்லையா? ஒரு வாதத்திற்காகக் கூறுகிறோம்.

ஆனால் புரட்சித்தலைவர் ஆட்சியில் அரிசி விலை ஒரு கட்டுக்குள் நிற்கிறது.

வெளி மார்க்கெட்டில் ஒரு கிலோ அரிசி விலை இன்றைக்கு 4 ரூபாய்.

நியாய விலைக் கடைகளில் அதிகபட்சம் 2 ரூபாய்.

கருணாநிதி ஆட்சியில் அரசு ஊழியரின் சம்பளம் 397 ரூபாய். இன்றைக்கு மாண்புமிகு முதல்வர் புரட்சித்தலைவர் ஆட்சியில் 859 ரூபாய்.

397 ரூபாய் சம்பளம் வாங்கும் போது ஒரு கிலோ அரிசி 10 ரூபாய். புரட்சித் தலைவர் ஆட்சியில் 859 ரூபாய் சம்பளம் வாங்கும் போது ஒரு கிலோ அரிசி நியாய விலைக் கடையில் அதிகபட்சம் 2 ரூபாய்; வெளிமார்க்கெட்டில் 4 ரூபாய்.

கருணாநிதி ஆட்சியில் ஆலைத் தொழிலாளர்களின் சராசரி சம்பளம் 400 ரூபாய். இன்றைக்கு புரட்சித்தலைவர் ஆட்சியில் சராசரி சம்பளம் 1000 ரூபாய். 400 ரூபாய் சம்பளம் வாங்கும் போது ஒரு கிலோ அரிசி பத்து ரூபாய் ஆயிரம் ரூபாய் சம்பளம் வாங்கும் இன்றைக்கு — புரட்சித்தலைவர் ஆட்சியில் ஒரு கிலோ அரிசி நியாய விலைக் கடைகளில் அதிகபட்சம் 2 ரூபாய். வெளி மார்க்கெட்டில் 4 ரூபாய்.

## தாய்க்குலமே! நாட்டோரே! நல்லோரே! சிந்திப்பீர்!

குறிப்பு :— இதில் குறிப்பிடப்பட்டிருக்கும் தங்கத்தின் விலை 24 காரட் தங்கத்திற்கான விலை என்பதை தெரிவித்துக் கொள்கிறோம்.
24 காரட் தங்கத்தின் மதிப்பை பொறுத்துத்தான் ஒரு நாட்டின் நாணயத்தின் மதிப்பு நிர்ணயிக்கப் படுகிறது.
1983ம் ஆண்டு டிசம்பர் 1ல் ஒரு கிராம் 24 காரட் தங்கத்தின் விலை ரூ. 194.50 காசுகள். எனவே ஒரு பவுன் — அதாவது 8 கிராம் தங்கத்தின் மதிப்பு 1560 ரூபாய்.

# கழக - மன்ற உடன்பிறப்புக்களுக்கு எனது அன்பு வேண்டுகோள்

கருணாநிதி கட்சி மேடைகளில் நமது இதயதெய்வம் புரட்சித்தலைவர் அவர்களைப்பற்றியும்; என்னைப்பற்றியும் தரக்குறைவாகப் பேசுகிறார்கள் என்றும்-எனவே பதிலுக்கு கழக-மன்ற உடன் பிறப்புக்கள் பலரும் கூட்டம் போடத் திட்டமிட்டிருக்கிறார்கள் என்றும் அறிகிறேன்.

அந்தப் பொதுக்கூட்டங்களில்எந்தக் காரணம்கொண்டும் தரக்குறைவாகவோ தரம் தாழ்ந்தோ எவரும் பேசக்கூடாது. எதிர்க்கட்சியினர் கூறும் குற்றச்சாட்டுக் களுக்கு அரசியல் ரீதியாக- கண்ணிய மாகப் பதில் தரவேண்டும்.

தரக்குறைவாகப் பேசுவது கருணாநிதி கட்சியினரின் தனி உரிமை. அந்த உரிமையில் நமது கழக-மன்ற உடன் பிறப்புக்கள் தலையிடக்கூடாது.

கருணாநிதி கட்சியினர் தரக்குறைவாகப் பேசுகிறார்கள் என்பதற்காக நமது மேடைகளில் அப்படி எவராவது பேசுவாரானால் அவர்மீது உடடினயாக நடவடிக்கை எடுக்கப்படும்.

இந்த அன்பு வேண்டுகோளை ஏற்று பேரறிஞர் அண்ணா அவர்கள் கடைப் பிடித்த-இதயதெய்வம் புரட்சித்தலைவர் அவர்கள் இன்றைக்கும் கடைப்பிடிக் கின்ற கண்ணியத்தையும், அரசியல் நாகரிகத்தையும் கழக-மன்ற உடன் பிறப்புக்கள் காத்திட வேண்டும் என அன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

-ஜெயலலிதா

சென்னை-14 கொள்கை பரப்புச் செயலாளர்,
14-12 83 அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம்.





கோட்டூர்புரத்தில்

## கழகத் தோழருக்கு கத்திகுத்து தி. மு. க. ஆசாமி கைது

சென்னை, டிச. 14— கோட்டூர்புரத்தில் கழக தோழரை கத்தியால் குத்தி கொல்ல முயற்சித்த திமுக ஆசாமி கைதானார்.

கோட்டூர்புரத்தைச் சேர்ந்தவர் மோகன் வயது 25.

இவர் கோட்டூர்புரம் பஸ் நிலையத்தில் இருந்த போது திமுக ஆசாமி என்று கூறப்படும் சபாபதி யும்வேறுசிலதிமுகவினரும் மோட்டார் சைக்கிளில் வந்து மோகன் வயிற்றில் கத்தியால் குத்திவிட்டு ஓடினார்கள்.

சபாபதியை பொது

4-ம் பத்தி பார்க்க

## புரட்சித்தலைவரிடம் வழங்கப்பட்ட தேர்தல் நிதி

திருச்செங்கோட்டில் நடைபெற்றகழகப்பொதுக் கூட்டத்தில் சேலம் மாவட்டம் சார்பில் முதல்வர் புரட்சித்தலைவரிடம் வழங்கப்பட்ட தேர்தல் நிதி

ரூ. 1, 47, 978-20

பெரியார் மாவட்டம் சார்பில் முதல்வர் புரட்சித்தலைவரிடம் வழங்கப்பட்ட தேர்தல் நிதி.

ரூ. 1, 25, 250

## திருத்தம்

தலைமைக் கழகத்தின் சார்பில் அச்சடிக்கப் பட்ட விலைவாசியை பற்றிய துண்டுப் பிரசுரம் வீடு வீடாக வழங்கப்பட்டு வருகிறது.

அந்த துண்டுப் பிரசுரத்தில் 3-வது பக்கத்தில் உள்ள கடைசி பாராவில் அச்சுப்பிழையாக "கடை நிலை ஊழியர்" என்று வந்துள்ளது.

"கருணாநிதி ஆட்சியில் அரசு ஊழியரின் சம்பளம் 397 ரூபாய் இன்றைக்கு மாண்புமிகு முதல்வர் புரட்சித்தலைவர் ஆட்சியில் 859 ரூபாய் என்பதே சரியானதாகும்

-தலைமைக் கழகம்

மதுரை நகரில்

## மக்கள் குறைகளை உடனடியாகத் தீர்க்க மேயர் நடவடிக்கை



**மதுரை, டிச. 14. மதுரை மேற்குத் தொகுதியைச் சேர்ந்த பகுதிகளில் மேயர் பட்டு ராசன் மக்கள் குறைகளைக் கேட்டறிந்து, உடனடி நடவடிக்கைக்கு உத்தரவிட்டார்.**

மதுரை மேற்குத் தொகுதியைச் சேர்ந்த பல்வேறு பகுதிகளில், மேயர் பட்டுராசன்சுற்றிப் பார்த்து மக்கள் குறைகளைக் கேட்டறிந்தார்.

மதுரைமேற்குத் தொகுதியைச் சேர்ந்த செல்லூர், மேலத்தோப்பு, ஜான்சி ராணிபுரம், அம்பேத்கார் தெரு. ஆகிய இடங்களில் மேயர் பட்டுராசன் மக்கள் குறைகளைக்கேட்டறிந்தார்.

மக்கள் கூறிய புகார்கள், மற்றும் ஆலோசனைகளைப் பரிசீலித்து உடனடி நடவடிக்கை எடுக்க மாநகராட்சி அதிகாரிகளுக்கு மேயர் பட்டுராசன் உத்தரவிட்டார்.

அப்பகுதிகளில் உள்ள சத்துணவு மையங்களுக்கும் சென்று மேயர் பட்டு ராசன் பார்வையிட்டார்.

1-ம் பத்தி தொடர்ச்சி

மக்கள் விரட்டிப் பிடித்து விட்டனர். பிடிபட்ட சபாபதியைப் போலீசார் கைது செய்து கொலை முயற்சி வழக்கு பதிவு செய்துள்ளனர்.

இது தொடர்பாக மேலும் 3 திமுக வினரை போலீசார் தேடி வருகின்றனர்.

மோகன் ராயப்பேட்டை மருத்துவ மனையில் அனுமதிக்கப் பட்டுள்ளார்.

நெல்லையில்

## அண்ணா தொழிலாளர் சங்கக் கூட்டம்

நெல்லை, டிச. 14- நெல்லை மாவட்ட அண்ணாபொதுத் தொழிலாளர்கள் சங்க கூட்டம் நம்பிராஜன் தலைமையில், முகைதீன்பிச்சை முன்னிலையில் நடைபெற்றது. அச்சமயம் செங்கோட்டை புலாங்குடியிருப்பைச் சேர்ந்த பாரம் தூக்கும் தொழிலாளர்கள் 100 பேர் நம்பிராஜன் முன்னிலையில் இச்சங்கத்தின் உறுப்பினர்களாக சேர்ந்தனர்.